வேலுமயிலும் துணை.

திருவானைக்கா

# மும்மணிக்கோவை.




இஃது

மதுரை தமிழ்ச் சங்கத்தில் B.A. சமானமான பாலபண்டிதபட்டம்பெற்ற

காங்கயம் அஷ்டாவதானம்

வெ. சேஷாசல நாயுடு அவர்களால்

இயற்றப்பட்டு,

ஈரோடு பிர்க்கா இளாம்பாடி மகா-ள-ள-ஸ்ரீ

E. K. முத்துசாமி கவுண்டர் அவர்களால்



ஈரோடு:

ஸெண்றல் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.



கீலக-௵ வைகாசி-௴

வேலுமயிலும் துணை.

திரிசிரபுரம் மலைக்கோட்டை மவுனமடம் தருமபுர
ஆதீனம் ஸ்ரீமத் சொக்கலிங்கசுவாமிகள்
இயற்றியது.

சாத்துக்கவி. 4063

ஆனைக்கா வாழுமெங்க ளண்ணல்மிசை பாலுடனே
தேனைக்கா லச்சொரிந்த சீரெனவே—ஞானமிகும்
சேடா சலம்சொல செழுமும் மணிக்கோவைக்
கிடாகா இக்கவி நூலே.

சிதம்பரம் ஸ்ரீ சபா நாயகர் கோயில் ஓதுவாரும் சிவகதா
பிர சங்க ரத்நாகரமுமாகிய மகா-௱-௱-ஸ்ரீ சி. அய்யாக்
கண்ணு ஓதுவார் அவர்கள்

சாத்துக் கவி.

---

எம்மணிக்கு முயர்மணியாங் கண்மணி
யைப்புய மணியும் மெம்மான்காவைச்—
செம்மணிக்கு மும்மணிக் கோவையைப்
புலவர் சிரமணியாய்ச் சிறக்கச்செய்தான்.
இம்மணிக்குள் ளெழு நூறு கவியை யொரு
மணிக்குளெனவிலைசக்கும் வாக்கான்—
நம்மணிக்குமுயர் சேஷாசலக்கவிஞன்
காங்கேய நகரன்மன்னே.

இஃது ஈரோடு பிக்கார் லக்காபுரம் மகாவித்வான் ஸ்ரீ
மான் அப்பாவு ராவுத்தர் அவர்கள் குமாரரும்
இந்நூலாசிரியரின் மாணாக்கருமாகிய
மகா-௱-௱-ஸ்ரீ சைது முஸ்தபா சாயபு
அவர்கள் இயற்றியது.

வேலுமயிலும் துணை.

---

சேடாசலக்கவிச் சிங்கமென் பூரமஞ் செய்யிடையா ர்
சேடாசலக்கவிச் சிங்கமென்மின் கொடிசித்தசனே ர்
சேடாசலக்கவிச் சிங்கமென் மேலுஞ் சிறப்பொடி சை
சேடாசலக்கவிச் சிங்கமென் னுண் மகிழ்தேசிக ரே.



வேலுமயிலும் துணை.





# திருவானைக்கா மும்மணிக்கோவை.

———:o:———

### காப்பு.

திருவானைக் காவரனைச் சீரயனையாண்ட
திருவானைக் காவரனைச்சீரண்—ணுரிமையினான்
மும்மணிக் கோவைக்கவியால் முத்தமிழ் பாடத்தும்பிக்
கைம்மணிக் கோவைத் தொழுவோம்காண்.

### நூல்.

சீராரும் பொன்னித் திருவானைக் காவினறை
யாராரு மெங்களகிலாண்டவல்லி—யாராரும்
பாகத்தானே யடியன் பண்டுவினை தீர்த்துனரு
ளாகத்தானே யருளுவாய்.

### அகவல்.

ஆய்பிழிமது வண்டருந்தித் தண்டலைக்
கண்ணிசைமுரலக் கவின்பெறுகுயிலினப்
கேட்டகமகிழீ இயாட்டுறும் பேட்டுடன்
வதுவையயயரும் வளங்கொளுமானைக்

காவிலுறைதருங் கோவியன்மாமணி
பருப்பதத்திறைவி விருப்பொடுநோக்க
வறலைத்திரட்டிப் பரவிடவிசைத்த
நாவலடியிணுவல னின்னை
யாவலுடன்றொழுக்—கடையேன்
றீவினைதீர்த்து மேவியாண்டருளே. (உ)

கட்டளைக் கலித்துறை.

ஆண்டலை யானையரவாபரணனை யன்றளித்த
பூண்டலை யானைப்புனையாத நெஞ்சரிப்பூதலத்தின்
மாண்டலை யானைமதங்கொண்டு தோன்றிவருவதைக்
காண்டலை யானையனே விரும்பெனைக்காத்தருளே. (௩)

வெண்பா.

காத்தலையின் மஞ்சடாக்காவினாறுந் தேன்றுளிக்க
மாத்தலையிற் கோகிலங்கள் வந்துளறப்—பூத்தநகின்
மின்னார்மலர் கொயெழின் மேவுகரிக்காவனடி
யுன்னுமென்னு ளென்றும். (௪)

அகவல்.

உறந்தையருகிற் பொருந்தியவெள்வரை
மாட்டெழுந்தும்பி நாட்டலர்கொய்து
வலனேர்புவலை இப்பாணிசொரிந்து
பூப்புனைகாலை மீப்படரூர்னை
உதிர்சருககற்றச் சதிருடனியற்றிய
வலையையகற்றுழி மனத்திடைச்சினந்து
நதிநோக்குற்றுத் தந்தியின்றுதிக்கைப்
புழையினிற்புக்குப் போரார்புரிந்தவ்
விரண்டும்பட்டபினிருங் கதியுதவிய
வெம்மோயெந்தவெம்மிடையுற்ற
பாசமகற்றிப்பரவி
யாசறுநின்கழற் பூசனையருளே. (௫)

கலித்துறை.

அருளேவடிவமதாகியவா முன்பகத்தியனார்
பொருளேயுணர்ந்திப் புவியைச்சமன்செயப்பூசித்திட
விருளேயகற்றி மனத்திடையின்பமிலங்கிடநற்
றெருளேதருமிறைவா வடியேற்கருள் செப்புகவே. (௬)

வெண்பா.

செப்புகவனித்துத் திருவானைக்காவான்மாட்
டெப்புகவனித்துன் றொடையெல்லாம்—ஒப்புக்
கவனித்துமண்ணிற் கழறேல்பழுதா
மெவனித்தும் கற்குறநேரே. (௭)

நிலைமண்டிலம்.

நேராம்பொன்வரை நிலைதவத்துற்ற
விருடியொருவன் கரத்திடைவீழ்ந்த
வெண்ணாவற்கனியரற் காமென்னக்
கொடுப்புழியிறையுண் டுமிழ்வித்தத்தவன்
றன்கொளத்தரியா வங்குரித்தோங்குந்
தருவிடையமர்ந்த தோகைபாகா
கருவடையாதெனைக் காப்பை நின்கதியே. (௮)

துறை-நாணிக்கண்புதைத்தல்.

கதிராழிசூழும் புவிப்பொன்னி நாட்டிற்கரிவனத்தில்
சதிராகவாழ்மயிலே நினைக்கண்டு தழுவவருந்
ததிநீயிலகப்பு லிங்கரடியைத் தரிசிக்கச்செய்
விதிநேரவர் மூடிகாட்டியற் போகவிளைவருளே. (௯)

வெண்பா.—கார்கண்டுவருந்தல்.

விளையாடிவந்துமின்னார் மேவுகரம்பற்றி
விளையாடிடப் பெய்தவள்ளல்—அளையாடி
வந்தவிடைகொண்ட மயலறுத்தான் மாமலைமே
லிந்தவிடை கொண்டலெழுமே. (௰)

அகவல்.

மேலாம்பரிதியிரு நான்கிறைடை
நாற்பானுக்கந்தவம் புரிந்தருள்கொளீஇ
வாழப்புரிந்த பெரும
தர்ம்மதியேனைத் தாங்கவாழ்த்தினனே. (௰௧)

துறை.

தினனேதவஞ்செயச் செவ்விடங்கண்டு சிறந்திருந்து
மனனேயடக்க வகையறியாரிந்த மாநிலத்தி
லினனேர்கதிர்கொள் திருவானைக்காவி லெழுந்தருள்சம்
பனனேயெவ்வாறுய்வர் நின்னருளோங்கிற் பலனுறுமே. (௰௨)

வெண்பா.

பலவண்டம் பெற்றவம்மை பாகத்தமர்ந்த
குலவண்டலர் தார்க்கொழுந்தே—புலவண்டன்
றத்துவத்தை நீகாட்டிச்சாருநிலை யோதுதமிழ்
வித்துவத்தைத் தந்திடுங்கோவே. (௰௩)

அகவல்.

வேதனுமாலும் விரும்பியெனினுங்
கேழலாகிக்கிளர் மதிமுடியடி
காணமுயன்றுங் கண்டறியாத
மங்கைபங்கா கொங்குதேர் வாழ்க்கைச்
செந்தமிழ்க்கூறி யந்தணற்காத்த
வெம்மோய் நின்னைப்பணிய
வகையுணரேனுய் வணமெவன்புகலே. (௰௪)

துறை.

புகலெங்குமின்றிப் பொருமாலையிக்கெனப் பூவினிடை
யிகல்குன்று வேற்கருளீந்த மெய்ஞ்ஞானமிலகவென்பா
லுகல்குன்று மாறுசெய்வல்லவயா ரிவ்வுலகினிடை
நிகரின்றியானையின் காவாவெழுந்தாயிஃது நின்கடனே. (௰௫)

வெண்பா.

கடக்கனனைக்கொன்று கடவாப்பழியை
யடக்கானைக்கொன்றை யருச்சித்—துடற்கருமால்
போற்றவருள் தந்திக்காப்புங்கவனே தீவினையை
மாற்றவருள் செய்வாய் நீவந்து. (௰௬)

நிலைமண்டிலம்.

வந்துவந்தென்னை வருத்துஞ்சஞ்சலம்
தன்னையகற்றி மன்னியநன்னிலை
யீவாயானைக் காவானேயென. (௰௭)

துறை.

எனக்கிற்றெனப்பொன் கலயந்திகழவெழுஞ்சிகரம்
கனக்குட்டுபொலியுந் திருவானைக் காவிற்கதித்திலகுந்
தனக்குற்றிடையிழைசெல்லாத வல்லிதனையனைசம்
பணக்கர்த்தனையெண்ணிப் பாடாதவாயென்ன பானையரோ. ௰அ

வெண்பா.

பானக்கமன்னபணி மொழியார்மாமயற்பட்
டூனக்கமன்னவலைந்தேன் கெடுவீர்—மேனக்க
வல்லபுராந்தகனு மாவானைக்காவானை
சொல்லவதியீர்கள்தூ. (௰௯)

அகவல்.

தூங்கெயிலெறிந்த தொடித்தோட்செம்பியன்
மரபினிற்கோச் செங்கட்சோழன்னெனச்
சிலம்பிக்கரும்பெறற் சித்தியளித்தோய்
குடங்கையறலுங் குழையுந்தருவோர்க்
கிடங்கொள்கட்செவிப் படத்தனையைந்துரு
மத்தினீழலும் வழங்கும் பெரும
கடையேன்மாட்டுங் கருணைவேண்டினனே. (௨௰)

துறை.—தலைவியப்புரைத்தல்.

வேண்டியவேண்டும்படியே யருளும்விமலர்மறை
யாண்டியங்கப்புலிங்கேசர் வெற்பிற்கிளராரணங்கே
பாண்டியன்மூதைபணிப்பகை யம்பிகம்பவ்வமுஞ்செய்
தீண்டியவெந்துயரெல்லாமகற்று நின்னின்றழையே. (௨௧)

வெண்பா.

தழையருந்தமாட்டாத தந்திதனைத்தந்த
கழையருந்தச் சித்துருவங்காட்டும்—குழையடர்ந்த
காதாகாதானுயகாலை வென்றேயாண்டிடலா
காதாகாதா நாயகா. (௨௨)

அகவல்.

காலற்கடிந்து கடவூர்மாட்டு
பாலற்காகிப்பரிந்த
நீலகண்ட நீ துணை தானே. (௨௩)

துறை.

தானேக நாதனெனவந்து பூதியைத்தந்துமதிள்
வானேகக்கட்டி முடித்தபிரான் மலர்மாளிகையின்
மானேகலந்திடுமால் விடையான் பிரமற்கரியான்
நானேகண்டேன் அருளானேகொண்டேன் களிநன்னெஞ்சமே

வெண்பா.

நெஞ்சமேயஞ்சமே நேர்வரினுமாமறலி
கஞ்சமேயஞ்சமே கண்ணடையல்—வஞ்சமே
கொண்டுமணநாறுமலர்க் கோலதயிலாண்டவல்லி
யண்டுமனைச் சேவித்தால். (உரு)

அகவல்.

தாலத்தானைமேலோர் சிறுவடத்தில்
செயலின்றியமர்ந்து மயலுறுங்குழவி
கடைவிரன்மீதோர் தடவரைநிறீஇ
இசைபெறச்செயல்கொளல் கரிக்காவண்ணல்
நசையறநினைத்தொழும் விசையென் மனமே. (உசா)

துறை தலைவிவருந்தல்.

ஆரேபுனைந்தவர்மாருதி ராமனருணனராக்
காரோர்மலையனுங் காரிகையார்க்குறுங் காலன்றோ
நேரேமதன் சிறுகால்பிகமல் மதிநீள்கடலும்
போரேசெயவைத்ததாலே யெந்தந்திப்பொழில்மணியே. (உஎ)

வெண்பா.

மணியேறுங்கண்டா மகத்திலமண்விட்ட
துணியேறுங்கண்டாண்டு துண்டித—தணிகிழஞ்சோ
வேதியகுமாரமகார் வேடமிணையனைநாக்காச்
சோதியகுமார்க் கமறச்சொல். (உஅ)

அகவல் நிலைமண்டிலம்.

சொல்லும்பொருளுந் தோன்றிடமிறைந்த
கல்விப்பெருக்கே கவின்பெறப்படர்ந்த
முகிலாண்டவல்லிந்திரன் முதல்வாழ்த்தும்
அகிலாண்டவல்லியம்மை யார்பாகா
இருபொருள் சேரவிசைந்த நல்லறிவும்
பெருகக்கொடுத்தருள் பேணெளியேற்கே. (௨௯)

துறை.

எளியேற்குநல்லருளிய மருதத்திடைதாளம்
அளியேற்கவல்லிற்கு முதமலர் தண்ணடை வளங்கொள்
களியேற்குமானையின் காவகிலாண்டையென் கண்மணியாள்
தெளியேற்கும் பாகனைப்பாவாலுறைத்த நற்சீரிதுவே. (௩0)

முற்றிற்று.

## இந்நூலாசிரியரால் இதுவரை பாடி அச்சிடப்பட்ட புத்தகங்கள்.



1 மயில்வாகனக்கடவுள் பதிகம்

2 கரைசைச்சிலேடை வெண்பா.

3 ஸ்ரீரங்கம் வழிநடைச்சிந்து.

4 சிலேடை வெண்பாத்திரட்டு.

5 வண்ணைப்பதிகம்.

6 புகழிமலைப்பதிகம்.

7 நாமக்கல் விநோதச்சிந்து.

8 தாந்தோன்றி வழிநடைப்பதம்.

9 பூகம்பக்கீர்த்தனை.

10 நல்லூர்ப்பதிகம்.

11 பில்லூர்ப்பதிகம்.

12 தோத்திரக்கவிமாலை.

13 ஆனந்தவிநாயகர் பதிகம்.

14 தியானமஞ்சரி.

15 பக்திரசமஞ்சரி.

16 ஞானரசமஞ்சரி.

17 திடசித்தக்கும்மி.

18 கரூர் கும்பாபிஷேக கும்மி.

19 வருகைப்பதிகம்.

20 ஆயிரவர் கல்யாணப்பாட்டு.

# முல்லைத் தேர்.

(ஒரு சிறு நாடகம்.)



திரு. கு. நா. சுந்தரேசன்.

ஸ்ரீ க. சுப்பிரமணிய ஐயர், B.A.

அவர்களின்

அன்பளிப்பு

# முல்லைத்தேர்.

(ஒரு சிறு நாடகம்.)

திருவாளர். து. நா. சுந்தரேசன் அவர்கள்,
கணக்காயர், பிரகம்புரம், கஞ்சம்.

வரலாறு:—'தனக்குற்ற முந்நூறு ஊர்களையும் பறம்புமலையையும் புலவர் கபிலர்க்காக்கி, வள்ளல் பாரி, எவரும் அறியாது, முன்னர் தன்னால் தரப்பெற்ற அழகிய தேருடன் மிளரும் முல்லைக் கொடிக்குள் ஒளிந்து கொண்டிருக்கும்போது, இருஆடவர், அவண் போந்து மன்னன்பாரி, விட்டுச்சென்ற குதிரையைப் பற்றவும், முல்லையால் மூடப்பெற்ற தேரினைக் கொள்ளவும், கருதும்போது, 'நல்லி' என்னும் அவர்களது உறவினள் அவண்தோன்றி முதலில் முல்லையைக் கொள்ள வேண்டுமென்று கருதியும் பின்னர், அக்கருத்து பிழைபட்டதெனக் கூற, அதைக் கேளாது, அவருள் ஒருவன் தேரைக் கொள்ள முயலும்போது, பாரிதோன்றி, அச்செயலைத்தடுத்து, அவர்களைப்போக்கி நல்லியுடன், பரிமேலேறி, பறம்புமலை சென்று கபிலர் முன்னர் நல்லியை மணக்க விழைந்து செல்லுதல்' என்பதோடமையும்.

## நாடக வுறுப்பினர்.

-பாரிமன்னன்—பறம்பிற்கோமான்.

**நல்லி**:—பாரிமன்னன் காதலித்த நங்கை.

**அரவன்**—நல்லியின் தம்பி.

**நஞ்சன்**—நல்லியின் உறவினன்.

[அடர்ந்த காடு, தரையில் படுத்து உறங்குவோன் ஒருவன், மனிதர் குரலும் குதிரையரவமும் கேட்டு விளித்துக்கொள்கிறான், எழுகிறான், நிற்கிறான்.]

**அவன்:—** அட, முருக! என்னை, பற்றியேகவோ, வருகின்றனர். போயிற்று மானம்! யாங்கு ஒளிப்பேன்? புதரகத்தே வாளா கிடந்தாலோ? சாலா, சாலா! மறந்தனனே, நற்புகல் உளது. நன்றி மறந்திலது. புகுவல் ஆங்கே, சேமத்திரையாம்!

[மறைகிறான் தழைகட்கும் இலைகட்குமிடையே: அவன் ஒளிந்து கொள்கின்றான் போலும், சலசலப்பொலி கேட்கின்றது. சிறிது நேரம் கழிந்த பின் அரவன், நஞ்சன் ஓடி வருகின்றனர்.]

**அரவன்:—** திண்ணம்: இது இப்பக்கமே போந்ததுமன்! என்னே மாயம்........சிச்சி!

**நஞ்சன்:—** பேய்க்குதிரை அது—வெங்கானற் பேய்த்தேர் போன்று: மீள்வோம் வருக, வேறு பணி நமக்கு உளது: அந்தணர் பெருமான் ஏவியது.

**அரவன்:—** நெருநல்..........தவச்சிறு பொழுதேயெனினும் அப்பரிமேல் விறல் அழகனை யான் வீற்று, உலாஅய்த் துய்த்த களிப்பினை யாங்ஙனம் நீ அறிதி, நஞ்ச? அதனை விடுவேனல்லேன் ....கூர்ந்து தேடு, சுற்றும்........வெவ்வேனில் நண்பகலினும் இருள் இங்கு சிதையாது போலும்; அன்ன செறிந்துள கொடியும் கோடும்....துருவித் துழாவு.

**நஞ்சன்:—** புரவியோ, வெண்மை; தானே தெரிக்கும் நம் கண்ணில். ஈண்டில்லை, அஃது ஆற்றங்கரையில் நேற்றுபோல் ஆண்டைத் தருத்தியிலேயே இருக்கவும் இருக்கலாம்: செல்கம் வா.

**அரவன்:—** அட, மடவ! மீண்டும் தோன்றுமோ அஃது ஆங்கே? உன் உள்ளம் அவாவுகிறது கரந்துறை மன்னனை?. எனக்கோ—யாவரேனும், நல்ல—நல்ல!....அந்தணன், பெரும் புலவன்—அருள் வெய்யோன்—செந்தண்ணிலவன்—அன்னவர் அரசியலினையும் யாம் துய்ப்போமே? பேறன்றோ; மற்றுத்தேடுவதேன்?....என்ன அரவம் அது?....நல்லியோ, என் குதிரைமேல்!

**நஞ்சன்:—** மாயமான்!

**அரவன்:**—தூயமான்! என் குரல் ஓர்ந்து பாய்கிறது வெளியே. வா, தொடர்வோம், கவர்வோம், ஊர்வோம், வென்றோட.

[ஒரு குதிரையின் கனைகுரலும் ஓடரவமும் கேட்கின்றனர்; அது கண்ணிற்குத் தெரிவதில்லை.]

**நஞ்சன்:**—(அரவனைமறித்து) பொறு சிறிது—நம் பரி விடுத்து வந்தோம், பெரும்பிழை—உதுக்காண் இவ்விந்தையினை!

**அரவன்:**—(திமிறிக்கொண்டு) விடுதி என்னை. பரி சேண் சென்றுவிட்டது.

**நஞ்சன்:**—பைந்தழைத்தூண் தாங்கும் கானரமகளின் திரு இருக்கைபோலும், ஓடற்க.

**அரவன்:**—(சிறிதே அத்திசை நோக்கிக் கைகூப்பி) அணங்கே, தொழுதேன்; என் பாய்ச்சல் வாய்ந்து, தேட்டம் வலம் கொள்க. அருள்க ஈது. நஞ்ச! நினக்கு இவ்வேட்டையில் வேட்கையிலது, யான் போகிறேன். ஆ—ஆ, அதோ நல்லி! அதனைமறித்து விட்டாள்....மீண்டும் வருகிறது அக்கொழும் பூம் பரி. (உரக்க) நல்லி, வருக! நஞ்ச, நீயும்வா: மூவேமும் மடக்கி நெருக்குவோம். எழு! (ஓடிக்கொண்டே) தொழுதது சாலும்.

**நஞ்சன்:**—(விழுந்து தொழுதுகொண்டே) நான் வாரேன், செல் நினக்கு அது புதுமை, எனக்கு இது.

**அரவன்:**—அஃதேதல், கிட (மறைகிறான்)....ஐயோ, இடை வழியில் உயந்தகன்றதே! வா, நல்லி! வீர மாது நீ. அடல் போர்ப் புதுமா மீது ஊர்வதன்றோ வீறு; நீ இவர்வது, எனது பழமுதுப்புரவியே: சிறப்பென்னையோ? (மறைதல்.)

**ஒரு குரல்:**—வீழ்ந்தேன், எம்பி, வருக, துணை!

**அரவன் குரல்:**—இதொரு வீழ்ச்சியா! நஞ்சன் ஆண்டுளன், மடிந்து. (நல்லி இவர்ந்து வந்த குதிரைமேல், அரவன் ஏறிச்செல்லும் ஓசை.)

நல்லி:—(திகைப்பத் தோன்றி) தான் அந்த புரவியை எய்திய தால் யான் வீழ்ந்தது இவற்கு மகிழ்வு! என்னே, இளங்குருதிக் கொதிப்பும் துள்ளலும்....எனக்கும் இது ஒக்கும்....குறுமகள் நெடுவழி வந்தனனே. உசாத்துணையுமிலேன்........வாரானோ, என்னை? (பெருமூச்செறிகிறாள்.)

நஞ்சன்:—(மெல்ல எழுந்து, கண் துடைத்துக் கொண்டு) அம்ம வாழி, நல்லி! இதுக்காண்! கவலற்க, அஞ்சல்! செவிலி, தோழியின்றி தமியளாய் வந்ததென்னோ? ஈங்கு முன்னர் அணங்கு உறைவது அறிதியோ?

நல்லி:—(திரும்பி நோக்கி) எது, யா, எங்கே?

நஞ்சன்:—இஃதே, உற்றுக்காண்! ஆரவன் தொடநும் வெண்செழும் பொங்குள வாமான் பதுங்கிக் கிடந்தது உவ்வே! இது யாதென மதிக்கின்றனை நங்காய்?

நல்லி:—முழுதும் கொடிபடர்ந்து, மூடியுள்ளது—ஆராய் வோம் வருக, நஞ்ச!

நஞ்சன்:—தொடற்க, தீண்டற்க, சீறும் தெய்வம்!

நல்லி:—சீறும் தெய்வம்? கருதலை இலதோ தெய்வற்கு? (சிறு நகை கோட்டி) என்ன நஞ்ச, முது பேதாய் நீ! கையியல் கவின்தேர் ஒன்று, இது. அஞ்சுவது அறியாமை, காணாய்! இது திண் ஆழி, உதுபூங் கொடிஞ்சி, அதுக்காண் கொடுநுகம்!

நஞ்சன்:—(துணிந்து குறுகல் அஞ்சி) மானுடத் தேரா? வானின்றிழிந்த திருச்சகடன்றோ; மடவரல், நீ வா, போகுவம் நம் ஊர்.

நல்லி:—வாரேன், கொடியும் முல்லை. முல்லை! முல்லை! நம் காட்டுவளாக வரைப்பிலே முல்லை யாண்டுமே காணற் கரிதாய்! யாங்கும் வறண்டு உலர்ந்ததோ கடவுட் சினத்தாலென்று, அன்னை, அளியள், கவலும். ஈங்கு ஒன்று, விரைவிரி மலரில தேனும், தழைத்துக்கலித்து ஒரு தனிவீறுகிறது இக்கானிருளில். செல்கம் நம் நகர், அன்னைக்கு அறைந்திடுவோம்.

**நஞ்சன்:**—யாது நீ எண்ணுகிறாய் நல்லி? இது நாட்டுக்கு நல்ல அன்றோ? இனி நகரிலே நம் நெடு முல்லைசான்ற கற்புகள் மலிந்திட மணமுரசு முழங்கும் போலும். (முன்செல்கிறான்)

**நல்லி:**—மணமுரசு?....விரைவொடு புகுக நின் காதலி மனைக்கு......காளை இவன், என்ன கோழை, அஞ்சுகிறான், அகல்கின்றான் விரைந்து....இன்றே, இன்னே.... விரைவொடு புகுகலை? (நகைத்து)....இன்றும் என் திட்டம் வழுக்கிற்று. அவர் சென்ற ஆறு இஃதே மன், நானும் நண்ணுகின்றேன் இவ் அதரிடை! அறவே மறந்தனர்! முல்லைத்தேரே! தொழுதனன் உன்னை. களவிடரினை கற்பின்பாலாக்கும் ஆறு அறியாயோ நீ. மகிழ்நன் தேர் ஆழிகழன்றதோ....அச்சு இற்றதோ? மணல் தகைந்ததோ? அன்றி கொடிபாய்ந்து பிணித்து நிறீஇ சிறை செறித்ததோ, தெரிந்து போகல்!

**நஞ்சன் குரல்:**—நல்லி! ஏன் தாழ்க்கின்றாய், முள் தைத்து நோகின்றதோ நின் மெல்லடி? புலம்பு குரல் என்?

**நல்லி:**—செல், நீ துணைவ! மைந்தனன் இனியே....ஆய்வல் இதனை (முல்லைத்தேரருகு சென்று கொடிஞ்சியினைப் போர்த்த இலைகளை விளக்கி உற்று ஆராய்கையில்) எண்ணினேனன், ஐயையோ, இறந்தினர்....மாண்டனர் (உயிர்ப்பு நீங்கி தோடியில் தரையிலே வீழ்கிறாள்.)

**நஞ்சன்:**—அரவம் தீண்டிற்றோ, மற்று தேராங்கேயோ? (ஓடோடி வருகிறான்) அம்ம, வாழ்க நீ திருவொடு பண்ணுள்!.... நல்லி! நல்லீஇ!—செத்தனள்....போய் அரவனைக்கொணர்வேன் ....ஆ, தமியளாய் இவளை இங்ஙன் விட்டகல்வதோ? (உரக்க) அரவா! அரவா! (சேண்நோக்கி) இன்னும் அதனைத் துரத்திய வண்ணம் முடுகி முடுகி வளைந்து சுழிகிறான்........(மெல்ல) நல்லி.... எழு! ஐயோ, (குனிந்து தாழ்ந்து, இருகைகளையும் தன் முதுகின் பின் பிணைத்து) மூச்சில்லையே....அரவ!....(சேண் நோக்கி) ஆம், கடவுள் அருளே—களைத்த கான்பரி இறுதியில் அவனையே எதிர்க்கிறது, பொள்ளென மடங்கி, வீழ்ந்தான் அரவன்....அவனையேனும் மீட்கிறேன் (மறைகிறான் சிறிது நேரம் கழிகிறது. இலைகளிடை சிற்றோசை இருமுறை கேட்கிறது, நல்லி மெல்ல விழிக்கிறாள்.)

**நல்லி:**—அம்ம, தோழி....யாண்டுளேன் யான்?....நஞ்சா!....போயினன்!....வாழி அவன், மணம் புணர்க இனிது....யானோ... இத்தேரோனே மன்....மாண்டான் மன்ற. அவனதே, அவனதே ஈது. அத்தலைப்பெயல் நாள், சிறுபோது புகல்புகுந்து, இனியன் மடியில் இப்பொலந்தேர் மீது யான் ஒடுங்கிப் புனைந்தது, யாங்ஙன் மறப்பல்? எனைநாடி வந்த ஒருநாளிரவில்.?..களிறோ, புலியோ, அரிமா ஏறோ....யானறியேன் இவர்த் தாக்கி நூறி, விருந்து மகிழ்ந்துளது மன்ற....இனி, அவர்க்காணேன்; மண்ணகத்து இலர்—விண்ணகம் புகுவல் யானும்.

**அரவன்:**—(ஓடோடி வந்து) விண்ணகம் புகினும் மீட்பேன் என் ஆருயிர் அரும்பெறல் பொன்தாய் நல்லியை! எழு, அன்னாய் வா, என் நடந்தது?

**நல்லி:**—ஒன்றுமில்லை. இத்தேரினை வியந்து நின்றேன்.

**நஞ்சன்:**—விண்ணகத்திருந்து வந்ததென நீயும் அறிந்தனையோ....என்னை எள்ளினையே?

**அரவன்:**—தேர்? எது? (உற்றுப்பார்த்து)....ஆம், ஆம்! உருத் தெரியவொண்ணாது கொடியிலைகள் அதனைப்பிணித்து அணைத்து முழுதும் மறைத்துளவே; வீழ்க, நங்கடவுள்; சேண்உள்ளது நம்ஊர், மெல்லியள்நீ: இத்தேர் ஊர்தி உனக்கு வேண்டும். (அருகுசென்று) ஆழி, நுகம், தட்டு, பொகுட்டு....ஆ....அனைத்தும் திருந்தப் பொருந்தியுளவே! நல்ல தேர்! தெண்மணியும்.... (மணி அடிக்கிறான்) வா, திறல்நஞ்ச! இக்கொடிப் பிணிப்புகளைப் பிய்த் தெறி. பறி, எறி, செறிந்த சிறைத் தேரிற்கு சிறைதந்து பறக்க விடுவோம் வெளியே—ஈர்ப்போம், விடுப்போம்.

**நல்லி:**—(அரவன் கைகளைத் தகைந்து) வேண்டா, எம்பி! வீர, இத்தேர் வேண்டாம் எனக்கு, மெல்லவேனும் காலால் வருவல்.

**அரவன்:**—நம் குதிரையுளது, இதற்குப்பூட்டி விரைவோம் வீடு, எட்டிநில்.

**நஞ்சன்:**—அறக்களைத்தனை அன்னையே, அரவன் கூறுவது தகுதியே!

**நல்லி:**—என்னபகர்ந்தி! அணங்குறை கோயில் எனமாழ்கித் தொழுத உன் கூப்புக்கைகள், இப்பால் விரல்விரிந்து, பிடுங்குபு பிடுங்குபு; பறிபு, பறிபு என இக்கோட்டத்தினைக் குலைத்துக் கெடுத்து அழிக்குமா, துணிந்தனவோ, வீர?

**அரவன்:**—ஈதென்ன, பிதற்றும், அரற்றும்! அணங்கா? கோயிலா, கோட்டமா? கைத்தச்சியற்றிய மரவியல் பெருந்தேர் வேறென்?

**நல்லி:**—எம்பி இது, திருமுல்லை அணிந்த பொன்புனை மாண்தேர்; உற்றுக்காண்.

**அரவன்:**—கண்டனன்; கண்டனன் மகளே (சிரிக்கிறான்.) ஆதலால், விழைந்தேன். அந்த குதிரைபோபிழைத்தோடியது: இத்தேரினையேனும் எடுத்தேகுவல்! ஆ! கவினே, உரைகடந்தது. காட்சி அளப்பரும் மாட்சித்து. வேண்டும் இது; எனக்கு வேண்டும் (குதிக்கிறான்.)

**நஞ்சன்:**—விழையேல், விழையேல்! விடுக, கைதவிர் அரவ, தீங்கு நச்சுதியோ? புனிதம் போற்றிலை? நல்லி, போகுதும் வா!

**நல்லி:**—எம்பி, சிறுமக! (கைப்பற்றி ஈர்த்து) பாட்டும் காதையும் நம் அதர்நெடுவழியினைப் பூம்பொழிலென நிழற்றும், எழுக!

**அரவன்:**—(சிறிது நடந்து, மறையுமுன் திரும்பிப் பார்த்து) காணக்காணக் கருத்தைக் கவர்கிறது, பன் நிறங்களும்மறைந்து ஒரு மென்பைந்தேர் எனவே காட்சி இழிந்தும்! பன்நிறங்களும் பரிதியொளியில் சுடர்ந்திடினோ?....விடேன், விடேன்! (பாய்ந்து வந்து, தேரினை ஈர்க்கிறான்).

**நல்லி:**—உனதல்லதை வவ்வுதல் அறமோ, உரனரவ?

**அரவன்:**—புறவில், தமிதே தானே, இவ்வே—யாரும்நச்சுவதின்றி, கேழிழந்து, அணி புதைந்து, மண்ணொடு மண்ணாகிடக் காழ்நெகிழ்த்த, செல்லும் புழுவும் விருந்தழிக்க, நிற்கும் தேர் இது—யாரதோ? எனதே!

**நல்லி:**—இத்தேரோனை யான் அறிவேன்—உனதல்ல.

**அரவன்:**—தேரோனை நீ யறிவாய்? யாரது, விளம்புதி? (நகைக்கிறான்) யாங்கு அறிவாய்? யாவன் அவன்?

**நல்லி:**—(நாணம் மிக) ஏன் அலைக்கிறாய் சின்மொழியேனை? உனதல்ல அது—வருக நீ வாளா!

**அரவன்:**—யாவன் அவன்? சொல்லு. அவனிடம்கொண்டு கூட்டுவல் இதனை....பணி அது உகந்ததனிறோ நினக்கு?

**நஞ்சன்:**—மெய்யே, தேரோன் தேடித் தருதியோ?

**நல்லி:**—(சிறிது சூழ்ந்து) அஃதேதல் ஒக்கும் (நகைக்கிறாள்)

**அரவன்:**—வா, நீயும், விரைவில் விடுவிப்போம், அறுத்தெறி, மெல்லங் கயிறுசளை! மணமிலி கொடி!

**நல்லி:**—ஐயோ, கடவுள்! தொடற்க, தொடற்க! மணமிலி! அட, படிறா, அரவ! முல்லையடா இது! மலரும் நாளிஃதிலதால், காழ்வு அடங்கிக்கான் நடுவண் தவம் கிடக்கும் இது (இருவரையும் விலக்குகிறாள்.)

**அரவன்:**—மடமை மன்ற நீ! தேரும் விழைதி: தேரோனைக் காணற்கு, முல்லையும் அரிவின்றி உய்ந்திடல்வேண்டும் (சிரிக்கிறான்.)

**நல்லி:**—ஆம், என் கற்பு ஒப்பதற்கு

**நஞ்சன்:**—பேதைமை, பேதைமை! (பெருநகை முழக்க).

**நல்லி:**—அப்ப, வாழி நும்கல்வி, நாட்டிற்கொரு முல்லையிது!

**அரவன்:**—பொய்! பொய்! நல்லி, உன் வாய்மை இஃதோ? ஒரே முல்லை? (சிரித்து என்னுகிறான்).

**நல்லி:**—நம் பெருநில வைப்பில், யாங்கணுமே முல்லை ஒன்றுமே காண்பதரிதுமன், என்று சென்ற கார்ப்பருவத்தும் கவன்றிலரோ நம் ஊர்ப்பெருமுதுப் பெண்டிர்? ஈண்டு உள தொன்று. மழவீரர்காள், கொல்லன்மின் அதனை!

**அரவன்:**— (புன்னகை பொங்க) பிய்த்தெறிவோம், இவ்வொன்றை; தேரினில் குவித்து, நினக்கு அம்முல்லை மெல்லணை பரப்பி, ஆங்கிருத்தி ஊரடைந்து, வீடுதொறும் பாத்தீந்து

கொல்லையெல்லாம்........இவ்வொருதாய்—ஆயிரம் தலைகளோடுப் படர ஆற்றிடுவோம், பெரும்பணி! எளிதில் வேர் வீழ்க்கும் தெய்வமன்றோ, இது மூரல் முல்லை? நல்லி, இப்பணியும் உகந்த தன்றோ நினக்கு?

**நல்லி:**—எளிதில் வேறான்றுவதோ....? இராது—எளிதில் ஊன்று—எளிதில் ஓங்கா—கற்பன்றோ முல்லை—கல்போன்ற தடா, அரவ!

**அரவன்:**—கொடியியல்பு அஃது, யாவரும் அறிவர். அட்டில் அகலா நல்லி யாதறிவள்?

**நல்லி:**—(தயங்கி) என் செவிதனை மயக்கி, வாய்தனைத் தைக்கின்றீர், நும் குதிப்பெருங்களிப்பால்—மருள்கின்றேன் யான், நும் மனம்போல் இயல்க....முல்லையும் மூரலும் எமக்கு எவன் வேண்டுகோ (கண் கலங்குகிறாள்).

**அரவன்:**—வருந்தல், அன்னாய்! முல்லைக்கொடி சாகாள், யாம் கூறுவது மெய்யே!

**நல்லி:**—செடி கொடி நூல் நனிபயின்றுளீர் போன்ம் எனக் கொன்று கொளுத்துக, இத்தேர்மிசை இவ்அடர்வொடு துன்னிட, சிறுமகள் முல்லைக்கு எந்நாள் ஆயினவோ, ஓராண்டகவையோ—மற்று, திங்கள்....?

**நஞ்சன்:**—மூன்று நான்கு ஆண்டுகட்குக் குறைவு இரா, மன்ற!

**அரவன்:**—அதனினும் இறந்துளதாதல்வேண்டும் காலம்...., ஐயமின்று!

**நல்லி:**—அஃதேதயோ?....(கவல்கிறாள்)

**அரவன்:**—கவலற்க, அன்னாய். காலம் தாழ்க்கின்றது. தேரும் விடுவோமல்லோம், கொடியும் விடுவோமல்லோம். மகிழ் நீ. வா நஞ்ச. களிப்பொடு நீயும் உதவுக, நல்லி!

**நல்லி:**—மெல்லி, யான். (கண்களைக் கையால் புதைத்துக் கொண்டு, தரையில் சாய்கிறாள், மற்றிருவரும், இஃது அறிகிலர்.)

**அரவன்:**—ஏட, நஞ்ச, வலது செல் நீ, நான் இங்கே முயல்வல்!

**நஞ்சன்:**—இருவருக்கும் ஈங்குளது வேலை—பிரிவானேன்?

**அரவன்:**—அட, மடவ! பேதாய், என் அஞ்சுதி?

**நஞ்சன்:**—(நகையொடு) அச்சமில்லை, அச்சமில்லை.

**ஒருகுரல்:**—யாவர் ஈங்கே? ஒழிக! ஓடுக!

**நஞ்சன்:**—(நடுங்கி) கேட்டனையா? வானிழல்அது. அன்றி....

**அரவன்:**—கேட்டேன் யானும். அம்ம, நல்லி, நீயா கூவினாய்?

**நல்லி:**—கேட்டனன் யானும். தேரகத்திருந்து எழுந்தது போன்றதே! (எழுகிறாள்).

**நஞ்சன்:**—அணங்கு! அணங்கு! செல்கம் வருக. நான் தொடேனிதனை.

**அரவன்:**—போகுக பித்த! எனக்கு உள இரு கைகள்; கால் நாழிகைவழி நீவிர் செல்லுமுன், தேரொடு என் முதுமான் பூட்டி நும்மை எய்துவல்; செல்க அன்னாய் நீயும்........தமியனாய் நிற்க அஞ்சலன் யான். (கொடிகளைப் பறிக்கத் துவங்குகிறான்) என் இரு கைகளே சாலும்.

**ஒருகுரல்:**—இனியோ? இனியோ?

**நல்லி:**—தேருள் நின்று உருமுகிறது அக்குரல்!

**அரவன்:**—ஐய, கடவுள்! என்வலதுகையினை இறுகப் பிடித்துளதே—அசைக்க இயலவில்லையே—நல்லி! நஞ்ச! வருக.

**நஞ்சன்:**—மாட்டேன், வா, நல்லி, ஓடுவோம்!

**நல்லி:**—உன் கையினையோ பற்றியுள்ளது தெய்வம், வந்தேன். நஞ்ச, பெருந்தோழனல்லனோ நீ—இரியல்போகுதியோ இடரிலே? (அரவன் அருகுற்று கொடிக்குள் மாட்டுண்ட கையினை விடுவிக்க தன் இருகைகளாலும் முயல்கிறாள்)

**அரவன்:**—முடியாது. அப்ப! அம்ம! குடுமிப்பிரான்! நோகிறதே, என் இறை—முறிகிறது—என்பு அங்கே! எவனை நோகோ?

**நல்லி:**—பொறு சற்று, அரவ! இலைகளை நீக்கி நிறுத்துக ஒரு சேர், உன் இடக்கையால்!

**அரவன்:**—மாட்டேன், செய்தது பிழை! பொறுத்தருள்க கடவுளே!

**நல்லி:**—(கூர்ந்து நோக்கி) யாரிதுஉள்ளே? நெகிழ்க கையினை அறிந்தேன், விடுக பிடி!....என்ன, என் முகத்தினைப் பற்றுதி? விடு, விடு—அரவ! பார், உன் கண் கொண்டு, என் முகத்தினைத் தைவருகிறது வெருவரு அணங்கு, என் கற்புத் தேய்கிறது—காக்கிரோ கடவுளே?

**அரவன்:**—(தன் உயவு அடக்கிக்கொண்டு, இடது கையினை நல்லி முகத்தருகு உய்த்து) தெய்வமே ஆகுக! பேயே ஆகுக. நின் அழித்து யானும் அழிவல்....ஆ! வலது கையும் விடுபட்டது.

**அக்குரல்:**—என் கொடிச்சியை இருகையாலும் தழுவவே! நல்லி, என்னை அறியாயோ?

**அரவன்:**—படிற! (நல்லியைப் பிடித்திழுக்கிறான்.)

**நல்லி:**—காதலர்! காதலர்! உய்ந்தேன் (நல்லி கழுத்தினைத் தீண்டியவண்ணமே, தேருள்ளிருந்தோன், கொடிகளை விலக்கி, வெளியேக் குதிக்கிறான், முதன்முதல் துயில் விழித்து ஓடியோனே!)

**அரவன்:**—அட, யார் நீ? கள்வன் நீ.

**அவன்:**—ஆம், ஆம், பொறுத்தருள்க (சிரிக்கிறான்) நல்லி, எழு, எழு.

**அரவன்:**—அவளைத் தீண்டியதற்கும் ஒறுக்கின்றேம். வா, அரசனிடம். யார் அகத்துள்ளே புகுந்து களவு பறித்து, இராக் காவலற்கு அஞ்சி இங்கு ஒளித்துள்ளாய்? வா, என்னுடன், நஞ்சா, ஏன் சேண் மடிந்து நிற்கிறாய்? பார் இவனை, அணங்கென நீ அஞ்சியோன். (நஞ்சன் ஓடிவருவதற்குள்).

**நல்லி:**—அப்ப, கடுஞ்சொல் வாரற்க! யானும் பகர நெடிது உள், நாப்புதைத்தேன்.

**அவன்:**—அறிவேன் நான், முல்லை சான்றவள் நீ, ஆகுதல் ஆதலின் பொறுத்தனை, ஒறுத்திடாய்!

**அரவன்:**—விடேளன், விடேளன்—வா, அரசன் பால்.

**அவன்:**—வேண்டா! வேண்டா! (கெஞ்சுகிறான்)

**அரவன்:**—அரசுகட்டில் ஏறியவர், அந்தணர்—சின வேலோனல்லன்—மெய் கூறின் உய்ந்து கலிக்கலாம், வா!

**அவன்:**—அந்தணரவர்க்கே யான் அஞ்சுவது; அவர் செங்கண் நிலவு முன் எதிர் நில்லேன்—பாரிக்கோ வெருவரேன்.

**அரவன்:**—பாரியின் நண்பனே—கபிலர், பெரும் புகழ்ப் புலவர் பெயர் கேட்டிலை நீ கயவ? வா, நஞ்சா! பிடி இவனை, வேங்கையொடு பிணித்துச்செறி இக்களிறனை; யான் தேரினை விடுவிக்கிறேன்.

**நஞ்சன்:**—(கைப்பற்றி ஈர்க்கையில்) வா, நில்லு!

**அவன்:**—நின்று? நின்று? நின்று, முல்லையை நீ அழிப்பது விழிகொண்டு காண்பலோ (திமிறி) தொடேல், கொடித்தேரினை, கொடி முல்லையை? உயிர் உகுத்தேனும் அதனைக் காப்பேன்!

**நல்லி:**—அப்ப, எம்பி, இவரதே அத்தேர்-யான் அறிவேன், தாமே வந்தனர் தனதினைக் கைக்கொள்ள, கையடைத்திடு. பெரும, கானகக் கோள்மாக்களால் சாவுண்டனை என்று மறுகியிருந்தேன் நெடுநாள்.

**அரவன்:**—அறங்காவல், யாவர்க்கும் உரித்தே—கள்வன் நீ—வருக எம்மொடு, அரசிடம்.

**நல்லி:**—பதிறுருட்டையன் நீ, எம்பி, வாயடங்கு!

**அரவன்:**—விடேன், விடேன்!

**அவன்:**—வாரேனெனில்? நஞ்ச! நீயும் அவனும் என்னைக் கட்டி வலிக்க வல்லீரோ? (நஞ்சன் பக்கம் திரும்புகிறான்.)

நஞ்சன்:—வல்லனல்லேன் (அடியில் வீழ்கிறான்.)

அரவன்:—அடகீழ! நஞ்ச, இதுபெரும்பழி? தீயரை மன்று படுத்தல் கடன் அன்றோ—மறைப்படுத்திதியோ நஞ்ச? வாடா கள்வ, அந்தணரிடம்!

நஞ்சன்:—(திடுக்கென, எழுந்து, பாரியென அறிந்து தணிவு கொண்டு) ஆம் வருக, அந்தணரிடம்; வரல்வேண்டும்!

அரவன்:—ஒரு கை பற்றுக நீ, மற்றது என்னிலே!

அவன்:—(புன்னகை நிலாத்தி) பற்ற வருகின்றனை?

நஞ்சன்:—ஆம், வருக, கவல்கின்றார் அந்தணர் பெருமான். நாடெங்கும் தேடித்திரிதருகின்றனர் வீரரும் மற்றரும்....எழுந்தருள்க.

அரவன்:—யார் நீ? பாரியோ?

நல்லி:—ஐயோ! கடவுளே, பொய்த்திடுக! வேண்டாம்!

அவன்:—பாரியா? யார் அவன்? யான் இங்கு கானகத்தே என் தேருள் வாழ்வோன்: முல்லைக்கொடி புறம்தரச் செழிப் போன். பாரியை நீவிர் கண்டிவிர் போலும். நல்லி, வா, பொறுத்தருள்க. அஞ்சல் நீ. (அவள்பால் ஏகுகையில்.)

நஞ்சன்:—பெரும, அறிவேன் நின்னை. நீயே பாரி!....நின் கை தவிரேன், நீ துறந்தீத்த அரியணையில்—அணையரியால்—கபிலர் மறுகுகின்றார், நீ செய்த கொடிய வண்மையை உன்னி யுன்னி!

நல்லி:—பாரியோ? வீழ்க என் உள்ளம், நெஞ்சே உடைக, அழிக, ஆழ்க!

அரவன்:—உதுக்காண், புரவி நம் நோக்கியே வருகிறது—யாங்ஙனம்? என்னைக்காண வெருவிற்றே-அப்புரவியும் நுமதோ ஐய?

அவன்:—(நகையொடு) ஆம், போலும். என் குரலோர்ந்து குறுகுகிறது. நல்லி, எழுந்தருள்வோம், நஞ்சன் அழைக்கின்றான்.

நல்லி:—யாங்கு? இருவேமும் எம் சிறு குடில் செல்வோம். பெரும, பாரி, நீ செல்க நும் பரிமிசை. அரியணைக்கு—அந் தணர் கவல்கின்றார், வாழ்க நின் கண்ணி, வாழ்க நின் தாரே (பணிகிறாள்.)

பாரி:—(அவளைப்பற்றி அணைத்து) நீயின்றிச் செல்லேன். உடன் போதுக. கனைக்கிறது பாய்மா! அரவ, கொணர்க அதனை அருகு.

அரவன்:—பெரும! எற்கண்டு வெருவுகிறது—நீயே கூவுக!

பாரி:—நன்று, இவட்கொண்டு யானே அதனிடம் செல்வல் (நல்லியைத் தூக்கித் தேர்த்தட்டில் அமர்த்தி.) அரவ! நோக்குக உன் கண்ணால்! அக்கண்ணாடேயே—நல்லி!—நும் தந்தையும், ஐந் தாயரும் தோழியும் ஆயமும் களித்திடுக இச்சிலம்பு கழிநோன்பு கண்டு; மகிழ்க! (நல்லியின் இரு காற்சிலம்பினையும் அவிழ்த்து, உயரத் தூக்கிக் காட்டி) நல்லி, காண்க என் காதலை, கருத்தினை! (சிலம்பு கட்கு முத்தமிட்டு, கண்களில் ஒற்றிப் பின் தன் மடியில் செருகிக் கொள் கிறான்.)

நல்லி:—(நகையொடு, முகம் குனிந்து, நாணி) இஃதென்ன நோன்பு? (கீழ் குதிக்கிறாள்.)

அரவன்:—அன்னாய், அரசியோ நீ (தொழுது நகைக்கிறான்) மகிழ்ந்தேதாம். இச்செய்தியினை நம் ஊர்க்குப் பறையறைந்திடு வோம் (களிப்பில் குதிக்கிறான்.)

நஞ்சன்:—யானே பறை தூக்கி....(குதிக்கிறான்.)

பாரி:—அரவ, சற்றுப்பொறு. யான் அரசனல்லன், ஊர் முந்நூற்றினையும் இரவலர் கொண்டனர்; அந்தணர் அழைக் கின்றாரே என்றே ஆங்குப் படர்கிறேன், படர்தாங்கி, அரசு மீண்டும் கைக்கொள்ள அல்ல (சிரிக்கிறான்.)

நஞ்சன்:—அந்தணர் மீண்டும் நல்கிடிலோ?....நீயும் உணர்ந் தனை அவர் உள்ளத்தினை—அரசு அடைத்திடவே நிற்கின்றார் எக்கமொடு.

பாரி:—புலவர் பெருந்தகை திருவுள்ளப்படி ஒழுகுவேன்!— வா, நல்லி, இருவேமும் அவ்வொரு புரவிமிசையே ஊர்வோம்!

அரவன்:—கொடுமை, கொடுமை! புரவி இறந்துபடும், தேரினைக் கைக்கொள்மின்—முல்லையைப் பிய்த்தெறிவோம்.

பாரி:—(முழங்கச் சிரித்து) அட, மடவ! தேர் ஈந்துவிட்டனன் முல்லைக்கு அந்நாளே....யாங்ஙனம் அதனை மீண்டும் பெறுவேன் மானமழியப்? அதற்கே அதனை ஈந்தனன்.

நஞ்சன்:—(வியப்பொடு) புதுமை! புதுமை!

நல்லி:—புதுமை என்ன? யானும் அன்னதே செய்தேன், முல்லையை அறுத்தெறிதலைத் தகைந்தனனல்லனோ?

பாரி:—உன் வாய்த்திறல் தேறலனைத்தும் தேருள் ஒளிந்து செவிமடுத்தேன், நல்லி! நாம் ஒத்த மனத்தோம்!

நல்லி:—"நம்மைத் தேடித் தருவர் இருவர்" என அதனை வேராறுப்பதற்கும் நேர்ந்ததனே உள்ளம்—பாவி! அது கேட்டு மனம் மாழ்கிலையோ நீவிர்—பாவி நான்! (தேம்புகிறாள்.)

பாரி:—கண்ணைத் துடைத்துக் கொள்! ஒரு முல்லை ஆயிரம் கொல்லையில் நகுதல் காணற்கன்றோ விழைந்தனை—ஆ, அரசித் தகைப்பெருமகள் நீ. இனியோ, அரசில்லை என்கையில். இரவலனாக யான், கூடலோ, உறந்தையோ, கருவூரோ, முதிரையோ செல்லல்வேண்டும் விரைந்து. நீயும் வருதியோ? மெல்லி?

நல்லி:—ஐயமென்ன? யாண்டும் உடன் வருவேன் காலில் சிலம்புப் பாரம் தவிர்ந்தது—இனிப் பிரியற்க (மீண்டும் தேம்புகிறாள்.)

பாரி:—(நல்லியின் முகம் மெல்லப்பற்றி, விழிநீர் மாற்றி) நின் அகன்று....இருதிங்கள் முன்....அற்றை நாள் நான் மீள்கையிலே—இக்கொடி வளியால் ஆடி அலைந்து, படர்கொழு தேடி மலங்குவது கண்டேன். சிறுகோடோ, புதரோ, கொம்போ யாதும் அருகிலில்லை, தேரொடு நின்றேன். கனைத்த கலிமா நுரைத்து நின்றது. கொடியினையே வேர் முதல் பறித்து அரண்மனை எடுத்தேகவெண்ணி, கீழிறங்கினேன், வலதாழிமீது ஒரு கொடி நுதியால், முல்லைமென்மகள், விரல்பற்றி இறைஞ்சுவது கண்டேன், தேர்ந்தேன், நடந்து சென்றேன், பறம்பிற்கு, அந்நாள் முதல்....ஓய்வு ஒழிவு இன்றி...

நல்லி:—நெடுவழியும் நடந்தோ கடந்தீர்?

அரவன்:—நடப்பதெவன்? பரிமேல் போனார் பேதாய்!

பாரி!—(கையொடு) பரியும் களைத்து நின்றது அதனையும் கானீந்தேன்....அல்ல, அல்ல—பரிமாவுக்குக் கானீந்தேன். கான்மகள் யாங்ஙனம் ஓம்பிச் சீராட்டித் தாலாட்டி வளர்த்துளாள், பார் அக்குதிரையினை! எல்லியும் இரவும் அது முல்லையைக் காவல் ஓம்பி........

அரவன்:—அரும்பெறல் பரியே! மாத்திறற் புரவியே.... (மெல்ல) பாரி வள்ளால்....யான்....

பாரி:—உணர்ந்தனன், உன்உள்ளம். உனதே அது. நடாத்துக, உன் மனைக்கு அதனை! அதற்கண்டு அஞ்சுகின்றனையே நீ (சிரிக்கிறான்.)

அரவன்:—பின்னர் கொள்வேன்; பிறைநான்று. இன்று நீவிரும் மணமக்கள், உலாக்கொள்க ஏறி—அந்தணர் அலமருகின்றார். மூன்று நாளும் மூவூழிற்றே அவர்க்கு!

நஞ்சன்:—ஆம், ஐய, நீடற்க; ஏறுக, புரவி!

பாரி:—நல்லி, கைதருக, வா, செல்கம் (முல்லை நோக்கிக் கை கூப்பி) இரண்டே திங்கள்! என்ன செழிப்பு! (வீழ் கண்ணீரைத் துடைக்கிறான்.)

நல்லி:—இருதிங்கள்! ஈராண்டு போல் நீண்டன எனக்கு. குறுமகள், கொடிச்சி என்னை மறந்தனீர் என்று நடுங்கினேன்.

பாரி:—அரசியல் பணிகள் இருதிங்களும் என் உயிரை, உடலை, உணர்வைக் கவர்ந்தன, நிற்காணப் போந்திடுமாறு கூடவில்லை. அரசு, ஒரு சுமை நல்லி, யாங்கு ஒளிப்பல் என்று அலைந்து இறுதியில்.... முல்லைதான் என்னுயிற்றே என்று ஏங்கி இங்குற்றேன், புகலகம் தந்தது. அந்தோ, அரசிற்கே வலிக்கின்றார் செந்நாக் கபிலர்.

நல்லி:—ஆழ்ந்து, சூழ்க மன்னி! அடிச்சியை மணப்பது தகுதியோ? ஐய, விடுதி, விடுதி என்னை.

பாரி:—மடவை மன்ற நீ! யாதுவரினும் வருக! என் அரசிற்கோ, நும் குடிக்கோ, நம் மக்கட்கோ—யாவ வரினும் வருக, நின்னின்றி வேறு மணவேன், அந்தணர் நம்மைப் புணர்த்திட நிற்கின்றார், கடிமனையில்! (நல்லியைத் தூக்கிக்கொண்டு செல்கின்றான், புரவி மீதமர்த்த.)

நல்லி:—நஞ்ச, நான், உயிர்ப்பு சோர்ந்து மண்சாய்ந்தகாலை, யாது நீ ஆற்றினை எனக்கு—எங்ஙனம் அறிவுணர்வு மீண்டேன்? சோர்வு ஆற்றவும், உணர்வு கொணரவும்....(திமிறிக் கொண்டு கீழ் குதிக்கிறாள்.)

நஞ்சன்:—என் ஆண்மை என்னை ஏசி நக, ஆயிடை, கை நல்கூர்ந்தனெல்லனோ? நின் காதல் மாண்பினை அறியேனோ—அயலவன் யான், நின் பெற்றோர் என்னைப் பெற்றிலர் அன்றே என்று நொந்து சிறிதுபொழுது என் தாயினை வெறுத்தேன், பொறுத்திடுக கடவுள். பொறுக்க எம்மான்! (பாரியை வணங்குகிறான்.)

பாரி:—யானும் கொடிக்குள்ளிருந்து வாளா நோக்கி யிருந்தேன்—வெளிவரல் நாணி, நஞ்சிற்கும் அரவிற்கும் அஞ்சி (நஞ்சனையும் அரவனையும் சுட்டிச்சிரிக்கிறான்) பொறுத்தருள் மகளே! நின்னை அவன் தீண்டாததே குற்றம்! (மீண்டும் நல்லியை மெல்லத் தூக்கிட.)

நல்லி:—வேண்டாம், மன்ன விட்டிடும் என்னை, (அவன் அரையிலுள்ள சிலம்புகளைப் பிடுங்குகிறாள்) ஒன்றே....மற்றதனையும் தருக! (குனிந்து கையிலுள்ளதை காலிலணிகையில்.)

பாரி:—மீண்டும் மீண்டும் அஃதே பகர்தி, உன் காதலஃதாயின், ஆகுக, தருகிறேன், (மடியிலிருந்து மற்றதனை எடுத்து, வீசிச் சேண் எறிகிறான்.)

நஞ்சன்:—ஐய, முருக! முன் முத்தமிட்டாய், இதுபொழுது வெறுத்தெறிவதோ சிறி!

பாரி:—வருக என்னொடு, தருகிறேன், ஆங்குள்ளது சிலம்பு (சிரிக்கிறான்.)

அரவன்:—(சீற்றத்துடன்) எறிவதென், பின் பொறுக்குவதென்? நல்லி, இவனை மணவேல்!

பாரி:—நல்லி! நடுங்குகின்றனை, (மீண்டும் அவளைத் தூக்கி) வருக, நின் மெல்லடி தாங்குமோ—அதுக்காண்—அப்பறம்புச் சிலம்பினை? பூட்டுவல் யானே அதனை—அந்தணர் கையிலுள்ளது (மறைகிறான், நல்லியொடு.)

நஞ்சன்:—புலவர்ப் புணர்ந்த நகை மகன்!

அரவன்:—அளிதே தானே ஊரே—உலா ஒய்வது பயில் விலி காடோ? எடுப்புவம் ஊரினை விரைக நஞ்ச!

நஞ்சன்:—பாரமகளிர், ஓம்புக எம் பாரி,
விழவொடு முழவொடு ஏம்புக நம் ஊரே!

(மறைகின்றனர்.)

—காட்சி முடிவு.

